5th May 1962] [Sri M. Bhaktavatsalam]

பேரைச் சேர்த்துக் கொள்வதால் ஒன்றும் கெட்டுப்போகாது. அந்த மன்றத்தைச் சேர்ந்தவர்களும் யோசனைகளைக் கூறுவது பலன் தரத்தக்கூதாகவே இருக்கிறது. இந்தத் திருத்தத்தை வற்புறுத்த வேண்டாமென்றும், வாபஸ் பெற்றுக் கொள்ள வேண்டுமென்றும் கனம் அங்கத்தினரைக் கேட்டுக் கொள்கிறேன். மற்றப்படி அவர் பேசியது இந்தத் தீர்மானத்திற்கு உகந்தது அல்ல. எஸ்டிமேட்ஸ் கமிட்டியின் சிபாரிசுகள் மீது சீக்கிரத்தில் நடவடிக்கைகள் எடுப்பதுபற்றியெல்லாம் அப்போதைக்கப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. மேலும் அதுபற்றி கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. மேலும் அதுபற்றி கவனம் செலுத்தப்படும் என்று கூறி, இந்தத் திருத்தத்தை வற்புறுத்த வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**SRI M. KALYANASUNDARAM**: நிதியமைச்சர் அவர்கள் மெஜாரிட்டியை உபயோகப்படுத்தி எனது அமென்ட்மென்டைத் தோற்கடிப்பதாகயிருந்தால் நான் வற்புறுத்தவில்லை. அதை ஏற்றுக் கொள்வார்கள் என நினைக்கிறேன். 9-30 a.m.

The amendment was, by leave, withdrawn.

MR. SPEAKER : The question is—

'That this House recommends to the Legislative Council that they do nominate five members of the Council to associate with the Committee on Estimates of this House for the year 1962–63 and communicate to this House the names of the Members so nominated.

The motion was put and carried.

## VI.—ASSOCIATION OF COUNCIL MEMBERS WITH THE COMMITTEE ON PUBLIC ACCOUNTS.

THE HON. SRI M BHAKTAVATSALAM : Mr. Speaker, Sir, I move—

'That this House recommends to the Legislative Council that they do nominate five members of the Council to associate with the Committee on Estimates of this House for the year 1962–63 and communicate to this House the names of the Members so communicated.'

**MR. SPEAKER : The motion is before the House for discussion.**

**SRI M. KALYANASUNDARAM :** இதற்கும் ஒரு திருத்தம் கொடுத்திருந்தேன். முன்பு கொடுத்த திருத்தத்தின் கதிதான் இதற்கும் ஏற்படுமென்று நினைக்கிறேன். போதுமான ஓட்டுகள் இல்லாத காரணத்தினாலும், பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியில் கௌன்ஸில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்வது பல ராஜ்யங்களிலுள்ள சம்பிரதாயமாகயிருப்பதாலும் இதைப்பற்றி ஆட்சேபிப்பது சரியாகயிருக்காது என்று நான் ஆட்சேபிக்கவில்லை. ஒரு யோசனை கூற விரும்புகிறேன். ஐந்தாண்டுகள் பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியில் வேலை செய்த அனுபவத்தை வைத்துப்

பார்க்கும்போது ஒரு ஆண்டுகூட பாக்கியில்லாமல் பூராவையும் பரிசீலனை செய்து முடித்திருக்கிறது. பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியின் தரமும் அதிகமாகயிருந்து அதிகாரிகள் பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியின் முன் சாட்சியம் கொடுக்கிறபோதும் கூட கவலையோடும் அச்சத்தோடும் கொடுத்திருப்பதைப் பார்த்திருக்கிறேன். பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி செய்யக்கூடிய சிபார்சுகள்மீது எடுக்கக்கூடிய நடவடிக்கைகள் நன்றாகயில்லையென்று சொல்லலாம். சொந்த அனுபவத்தை வைத்து சொல்லவில்லை. பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி சிபார்சுமீது, சென்ற ஐந்தாண்டுகளில் என்னென்ன யோசனைகள் கொடுக்கப்பட்டன, அவைகள்மீது என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டது என்று ஒரு ஆண்டுக்குள்ளாக புதுக் கமிட்டி முன்பு சமர்ப்பிக்க நிதியமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியில் அங்கத்தினர் அவர்களும் ஒரு உறுப்பினராகயிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஆகவே முதல் கூட்டத்தில் இப்பிரச்னைகளை அவர் எழுப்பினால் அவற்றையெல்லாம் கவனித்து எப்படி எப்படி செய்ய வேண்டுமோ அப்படி செய்யலாம். அவர்கள் சொல்வதை பரிசீலனை செய்யலாம்.

MR. SPEAKER : The question is—

'That this House recommends to the Legislative Council that they do nominate five Members of the Council to associate with the Committee on Public Accounts of this House for the year 1962–63 and communicate to this House the names of the Members so nominated.'

The motion was put and carried.

## VII.—THE MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET FOR 1962–63.

* **THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, தமிழ்நாடு மின்சார சபையின் 1962-63-ம் ஆண்டிற்கான ஆண்டு நிதி நிலை அறிக்கையும் 1961-62-ம் ஆண்டுக்கான துணை நிதி நிலை அறிக்கையும் இச்சபையின் முன் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. அவற்றை இப்போது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என நான் பிரேரேபிக்கிறேன்.

**SRI M. KALYANASUNDARAM** : On a point of order, Sir. கனம் தொழில் அமைச்சர் அவர்கள் மின்சார சபையின் வரவு-செலவு கணக்குகளை இந்த சபையில் முதலில் விவாதித்திருக்க வேண்டும். நிதி சம்பந்தமான பிரச்னை எதுவாகயிருந்தாலும் முதலிடம் இந்த சபைக்குத்தான் கொடுத்திருக்க வேண்டுமே தவிர தொழில் அமைச்சர் அவர்கள் அந்த சபை அங்கத்தினராக இருக்கிற காரணத்தினாலோ என்னவோ அங்கு முதலில் விவாதத்திற்கு